# பெண் என்று சொன்ன மண்!



இளநிலாக் கவிஞர்
வெ. இராசேந்திரன்

# பெண் என்று சொன்ன மண்!

இளநிலாக் கவிஞர்
வெ. இராசேந்திரன்

வெளியீடு

**உலக அன்பு இயக்கம்**

எண் 29, (அடித்தளம்) வி.ஜி.பி. வெற்றி வீடு
39, அண்ணா சாலை
சென்னை – 600 002

(பேரருளோடு பெருங்கருணையோடு
பொருள் உதவி புரிந்தது புகழ்கொண்ட
**டி.டி.ஜி. தொழிற்சாலை,**
அயனம்பாக்கம், சென்னை – 602 102.

# சிறப்புரை!

தமிழகத்தின் தலைநகர் - சென்னை தன்னில்;
தார்வேந்தன் தேர்போல திகழுகின்ற;
இமிழ்கடல் புகழ்கொண்ட 'டிடிஜி' தொழிற்சாலை
இயங்குகின்ற அழகெலாம் இறையருளே
இவ்வுலகில் இதன்புகழ் பரவும்; ஓங்கும்! இங்கே
இலங்குகிற தலைவர் திரு. இராமகிருஷ்ணன்; மற்றும்
இரவிஒளிபோல் அறிவொளியில் சிறந்து ஓங்கும்
மேலாண்மை இயக்குனர் திரு இரவிசீனிவாசன்,
இயக்குநர் இறையழகர் திரு தேவானந்தன் - இயக்குநர் திரு
மனோகரனார் என்பாரெல்லாம் இனியவுள்ளம்;
கனிவுவெள்ளம்; இருக்கக்கண்டேன்! இறும்பூய்
தெய்துகின்றேன்! வாழ்க! இன்பக்கவி இராஜேந்திரன்
சிறப்புப் பெற்றான்! இவன் பணியால்; தாய் போன்ற
தொழிலகத்தால்; - இவன் உயர்ந்தான்! புகழ்கொண்டான்!
வாழ்க! வெல்க!!

**ஆன்மஞானி - கவிஞர் - சுரா -**

# அணிந்துரை

*பாவரசு நா. காமராசன்*

கவிஞர் இராசேந்திரன் அவர்களின் கவிதைத் தொகுப்பைப் படித்தபோது என் இதயத்திற்குள்ளே இலக்கிய கங்கை வெள்ளோட்டம் போனது

வெண்ணிலவில் கால்பதித்த விண்வெளி மனிதன் 'ஆம்ஸ்ட்ராங்கைப்' பாடும் போது' கற்பனையால் அளந்ததினை காலடியால் அளந்தவனை என்று எழுதுகிற நுட்பம் நம்மை அடித்துப் போட்டு விடுகிறது. நிலவில் மண் இருப்பதை அவன் பயணம் எடுத்துக்காட்டியது.

'கவிஞர்கள் அனைவருமே
பெண்ணென்று சொன்னதினை
மண்ணென்று நிரூபித்தாய்'

என்று கவிஞன் பாடும்போது கற்பனையை அறிவியல் ரீதியாக மறுக்கும் துணிச்சல் தெரிகிறது.

'வளர்பிறை என்பதும்
தேய்பிறை என்பதும்
நிலவுக்குத் தெரியாது என்று எதார்த்தமாகப் பாடிய வைரமுத்துவோடு இந்தக் கவிஞனை ஒப்பிட்டுப் பாராட்டத் தோன்றுகிறது. 'பெண்ணழகு' சாதாரணமான திரைப்படப் பாடலைப் போன்றது. ஆனால் அதன் எளிய. இனிய நுட்பம் நம்மைக் கவர்கிறது.

'பள்ளியறைப் பாடல்' இனிய வார்த்தைகளை மலர்ச்சரமாய்த் தொடுத்து இலக்கிய மணம் வீச வருகிறது.

'வெண்சங்கு கழுத்தினை விரல் தடவும்
விம்மிய கன்னத்தில் இதழ்பதியும்
கண்களை மெல்ல இமைமறைக்கும்
கன்னியின் உடலைக் கரமளக்கும்'

சுளையாகக் காய்த்த பலா மரம் போல கனமான சிந்தனைகள் எளிமையின் இனிமையோடு வெளிவருகின்றது.

கோவில்பட்டி இராசேந்திரன் இந்தத் தொகுப்பில் கவிதைக்குக் கோவில் கட்டியிருக்கிறார்.

'திருமகள் அழகினை அழகிலை எனும்படி
மரவுரி முனிவரும் மயங்கிடும் அழகிது.

மரவுரி முனிவர் மேலும் காதல் மலர்க்கணைகள் பாயுமோ? அழகிய சந்தம் விடை சொல்ல வந்து கவிதைக் கடைதிறப்புச் செய்கிறது! ஆடல் அரசி ஒருத்தியை - அவள் நாட்டிய மாடும் அழகினைக் கவிஞன்

'காட்டிய அபிநயம் ஆயிரமாம் - இவள்
கண்கள் அதற்குக் காரணமாம்'.

என்று உன்னத நிலையோடு வர்ணிக்கிறான் ஷேக்ஸ் பியரைப்போல.

'பூட்டிய கைவளை ஓசையிலே - ஒரு
புல்லாங்குழலிசை தோற்குமடா!

அடடா! புதிய புதிய சொற்கூட்டங்கள் இனிய இசை ஒலிநயம்.

' நாளெனும் பொழுது நொடியாக - இந்த
நங்கையின் நாட்டியம் பார்த்திருந்தேன்'.

கவிஞர் தமிழ்ஒளியின் சந்த வீச்சும், சொல்லழகும், எளிமையும் இயற்கையாகவே இவனிடம் கொஞ்சி விளையாடுகின்றன.

கவியரசர் கண்ணதாசனோடு ஒரு கவிதையில் நம் இளவல் மோதுகிறார். அதை நீங்களே கண்டுபிடித்துப் படித்து ரசிக்கவும். செம்மாந்த நோக்கு, சீரிய அறிவு, சமூக நலம், மனிதநேயம் ஆகிய எல்லாக்குண வார்ப்புகளும் இங்கே கவிதையில் அபிநயம் செய்கின்றன. இவன் கங்கை கொண்ட இராசேந்திரன் போல் கவிதை கொண்ட இராசேந்திரன்

வாழ்க இளவல்.

அன்புள்ள

***நா. காமராசன்.***

# காமவலை

*கவிஞர். சுரா.*

என் உயிரிலும் உணர்விலும் ஒன்றெனக் கலந்த;
இளநிலாக் கவிஞர். இராஜேந்திரன்
இன்பவியல் கவிஞர். இனம்மொழி - நாடென -
அன்றில் பறவையென - அகமகிழ் கவிஞர். வாழி.
பண்பியல் கவிஞர் தம் பாடலினை சுவைத்தேன்.
விண்மண். விரிவையம் புகழினை,'
'விழிமொழி' வியன்றமிழின் புகழ் பெற்றார்.
விரிவான், மண், செறிவுறப்பெற்றார்.
அரியதமிழால் அடலேறு புகழை அகமகிழப்
பாராட்டுகின்றேன். இவரது
செறிவுற செந்தமிழால் பாராட்டுகின்றேன்.
ஜெகத்தில் செழிப்புடன் வாழ,
வாழ்த்துகின்றேன். வாழி.

அன்புத்தந்தை. கவிஞர். சுரா. நேர்ம மெய்யறிஞர்.
46, பார்த்தியன் சாலை சென்னை-8.

# அணிந்துரை

## அறநெறிச் செல்வர் S. கிருஷ்ணசந்த் சோடியா M.A

கவிஞர் இராஜேந்திரன் அவர்களின் இக்கவிதைத் தொகுப்பை கூர்ந்து நோக்கும் வாய்ப்பு கிடைத்தது. இந்த இளம் கவிஞர் விவேகானந்தரைப் பற்றி பாடும்போது.

தனித்திருந்து தவமிருந்து
கிளர்த்தெழுந்து புறப்பட்டு
சிக்காகோ நகரினிலே
சிங்கமென கர்ஜித்து

என்று இந்து சமய நோக்கினை வெளிப்படுத்திக் கொண்டே, வாயுவேகம், மனோவேகம் என, கவிஞனின் உள்ளக்கிடக்கின் காரணமாக இந்தியாவின் சுதந்திரத்தை நினைக்கின்ற முறையினை

வெள்ளையனின் கைப்பிடியில்
வெள்ளாடாய் இருந்தவரை
வேங்கையென மாறவைத்தார்

எனப் பாடும் பாங்கு, படிக்கின்றவரின் உள்ளத்திலே சுதந்திர உணர்வினை நினைவு படுத்துகின்ற பாங்கு பாராட்டுக்குரியது.

அதே பாணியில் புதியதோர் உலகு செய்வோம் என்னும் கவிதையில்

ஏர்வழி செல்லும் உழவர்
ஏழ்மையை துறக்கும் உலகம்

என்று சூழ்ந்துள்ள சமுதாய, விவசாயப் பெருங்குடி மக்களின் ஏக்கத்தை வெளிப்படுத்தியிருக்கின்ற பாங்கு "ஏரின்உயிர் பின்னது உலகம்" என்றும் வள்ளுவர் வாக்கினை நினைவு படுத்துகின்றது.



அடுத்து "அன்னையின் அடியே ஆலயமாகும்" என பாடியுள்ள கவிதை ஆன்மிகத் திளைப்பை மணிவாசகப் பெருமான்

"பால்நினைந்து ஊட்டும் தாயினும் சால"

என இறைவனை இறைஞ்சுகின்ற உணர்வை வெளிப்படுத்துகின்றது.

"அன்பு ஒளி" எனும் கவிதையிலே

பகிர்ந்தளிக்கும் பண்புஇங்கு வளரவேண்டும்
.............................................................
பேசுகின்ற வார்த்தையிலே கனிவு வேண்டும்
.............................................................
முடியுமென்ற நம்பிக்கை பிறக்க வேண்டும்.

என்ற வரிகள் பாரதியாரின் கவிதை வரிகளான

"நினைவு நல்லது வேண்டும்
நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்"

என்னும் உணர்வினை ஞாபகப்படுத்துகின்றது.

பெண்ணழகைப் பாடும்போது

மீன்தவழும் கொடியோ நீ
மீண்டுவந்த சிலையோ நீ

என்று எழுதுகின்ற பொழுது

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ"

எனும் திருக்குறள் வரிகள் நினைவுக்கு வருகின்றது.

இவ்வாறாக பல நிலைகளில் மனிதனின் அடிமனத்திலிருந்து எழுகின்ற உண்மைஉணர்வுகளை எளிய பாட்டின் மூலம் எழுதி சமுதாய சீர்திருத்தத்திற்கு தொடர்ந்து பேனாமுனை பயன்செய்ய, கலைமகள் துணையிருக்க வேண்டுமென பிரார்த்தித்து இந்த இளநிலாக் கவிஞர் வெஇராசேந்திரன் மேன்மேலும் உயர வாழ்த்துகிறேன்.

அறநெறிச் செல்வர் S. கிருஷ்ணசந்த் சோர்டியா M.A.

# ஏ.கே. வில்வம் அவர்களின் வாழ்த்து

'கவிதை' என்பது 'இயற்கை' யின்
திரை நீக்கம்.
அந்த வகையில் அருமையான சுந்தர
சந்தக் கவிதைகளைத் தந்துள்ள
என் தம்பி - இராஜேந்திரன்
இலக்கிய தரத்தோடு ஒப்பற்ற
கவிதைகளை - சீரிய சிந்தனையை
வெள்ளோட்டங்களாகத் தந்துள்ளார்.
வரிக்குவரி படித்தேன் - படிப்படித்
தேன் குடித்தேன்.
இந்த இளைஞன் கடாரத்தை -
சாவகத்தை - பர்மாவை வென்ற
இராஜராஜேந்திரனைப்போல
தன் கவிதைகளால் வென்றுவிட்டான்
அவன் கவிதைகளில் கொட்டுவது
வெறும் தமிழல்ல
கொள்ளிமலைத் தேன்.
அவன் கவிதைகளில் துள்ளுவது
கம்பனின் அற்புத விருத்தம்
அவன் கற்பனைகளில் காளிதாசனின்
'மேகதூதம்' 'சாகுந்தலமும்'
நிமிர்ந்து நிற்கின்றது.

அவன் உக்திகளில் புகழேந்தியின்
வெண்பாக்களின் கடைசி அடி
கவித்துவத்தின் உச்சத்தை
சொல்வது கண்டு
சிந்தை அணுவெல்லாம் சிலிர்க்கின்றது.
பாரதி - பாவேந்தர் கவிதா மண்டலத்தின்
இளவரசனாக இந்த
இராஜேந்திரன் வரவேண்டும்
வாழவேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

திராவிட இன கவிஞர்களின் வரிசையில்
அன்று முதல் இன்று வரை பேரறிஞர்
அண்ணா காலம் வரை முத்துத்தமிழ்
கவிதைகளைத் தந்துவரும் என் தோழன்
இனிய சகோதரன் கவிக்கு அரசன்
"சுரா" இந்த இராஜேந்திரன்
கவிதைகளை அங்கீகரித்துவிட்டார்
என்பதே இராஜேந்திரனின்
புகழுக்கு தனிப் பெருமை

வாழ்க அவர்,
வளர்க அவர்,
வெல்க அவர்.

தென்னகத்து எழுத்து வேந்தன் ஏ.கே. வில்வம்

# என்னுரை

**கவிஞர் வெ. இராசேந்திரன் B.E.,**

உலக அன்பு இயக்கத்திற்கும் தத்துவஞானி கவிஞர் சுரா அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றி.

இப்பொழுது இந்தநூல் உங்கள் கையில் தவழ்கிறது என்றால் அதற்கு மூலமே நேர்ம மெய்யறிஞர் உலக அன்பு இயக்கத்தின் நிறுவனர், அன்பு love என்ற தமிழ் ஆங்கிலம் தழுவிய திங்கள் இதழின் ஆசிரியர் கவிஞர் சுரா அவர்கள் தான். பேரறிஞர் அண்ணாவின் காலத்திலிருந்தே கவி உலகில் கொடிகட்டிப் பறக்கும் மாகவிஞர் சுரா அவர்களே என்னுடைய நூலை தன் நூலாக நினைத்து, இரவு பகலாக உழைத்து, இந்த நூலை வெளிக் கொணர்ந்துள்ளார்.

அவருடன் பழகுவதை நான் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன். பெற்றபிள்ளையைப் போலஅனைவரையும் பாவிக்கும் தன்மையும், அன்பிற்கே முக்கியத்துவம் கொடுக்கும் அவரது போக்கும், என்னை வெகுவாகக் கவர்ந்தவை.

குடத்தில் இருந்த இவ்விளக்கை குன்றின் மீது ஏற்றிவைத்த பெருந்தகை இவர்.

எண்ணெய்யுடன் திரிஇருந்தும் ஒளியேற்ற ஆளில்லாமல் இருந்த இந்த விளக்கிற்கு ஒளியேற்றி வைத்த உத்தமர் இவர்.

அன்பால் உலகத்தையே வெல்லலாம், நல்லதையே நினை என்ற உயர்ந்த கொள்கையை பின்பற்றும் கோமகன் இவர்.

பெருமக்களிடம் என்னை அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தி என் கவிவாழ்விற்கு வழிகாட்டிய ஆசான்.

பெற்றெடுத்த மகனை தந்தை தாங்கி நிற்பதுபோல என்னை தாங்கிநிற்கும் இவருக்கு தந்தைக்கு கொடுக்கும் மரியாதையை நான் கொடுக்கிறேன்.

## டி.டி.ஜி. தொழிற்சாலைக்கு என் நன்றி.

டி.டி.ஜி. தொழிற்சாலையின் தலைவர் திரு. இராம கிருட்டிணன் அவர்களுக்கும், இந்த நூலின் முதல் பிரதியை வெளியிட இசைந்த மேலாண்மை இயக்குனர் திரு .இரவி சீனிவாசன் அவர்களுக்கும் மற்றும் இந்நூல் வெளிவர பொருளுதவி செய்ய முன்வந்த, ஆதரித்து அரவணைக்கும் பண்பு நிறைந்த இயக்குனர் திரு.கே.கே.தேவானந்தம் அவர்களுக்கும், நான் T.T.G. தொழிற்சாலையில் சேர்வதற்கு காரணமாக இருந்த இயக்குனர் திரு.கே.எஸ். மனோகர் அவர்களுக்கும் தொழிற்துறையில் எனக்கு வழிகாட்டியாக விளங்கும் திரு.எ.எஸ். சுரேந்திரன் அவர்களுக்கும் மற்றும் எனக்கு ஊக்கமளித்த T.T.G. தொழிற்சாலையின் நண்பர்களுக்கும், என்னுடைய உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

நூல் வெளியீட்டு விழாவிற்கு தலைமை தாங்க இசைந்து விழாவிற்கு பெருமை சேர்த்த தமிழகத்தின் முதுபெரும் கவிஞர் உவமைக் கவிஞர் சுரதா அவர்களுக்கு என் நன்றி.

அக்காலத்தில் மன்னர்கள் கவிஞர்களை ஆதரிப்பார்கள் அதேபோல் இன்று கவிஞர்களை ஆதரிக்கும் கருணைஉள்ளம்

படைத்த தொழில் மன்னர் செவாலியர் டாக்டர் வி.ஜி. சந்தோசம் அவர்கள் இந்த நூலின் முதற்பிரதியை பெற்று விழாவிற்கு சிறப்புசெய்தார். அவருக்கு என் நன்றி.வி.ஜி.பி. வெற்றி வீட்டில் விழா நடத்துவதற்கு இடமளித்து உதவிய அருட்செல்வர். வி.ஜி. செல்வராஜ் அவர்களுக்கு என் நன்றி. வாழ்த்துரை வழங்கிய தமிழ்வளர்ச்சித்துறை முன்னாள் இயக்குனர் முனைவர் த.பெரியாண்டவன் அவர்களுக்கும் என் நன்றி.

கறுப்பு மலரை மணம்வீசவைத்த, அதைபற்றி அனைவரையும் பேசவைத்த புகழ் பெற்ற கவிஞரும் திரைப்பட பாடலாசிரியருமான பாவரசு நா. காமராசன் அவர்கள் என்னுடைய இந்த கவிதைத் தொகுப்பிற்கு அணிந்துரை அளித்துள்ளதை நான் பெருமையாகக் கருதுகிறேன். அவருக்கு என்னுடைய நன்றி.

முரசொலிப் பத்திரிக்கையின் மூலம் தமிழகமெங்கும் முரசொலித்துக் கொண்டிருக்கும் தென்னகத்து எழுத்துவேந்தன் ஏ.கே. வில்வம் அவர்கள் இந்த கவிதை தொகுப்பிற்கு வாழ்த்துரை வழங்கியுள்ளது நூலுக்கு அணிசேர்க்கிறது. அவருக்கு என் நன்றி.

சென்னை மேடையிலே என்னை முதல்முதலில் அறிமுகப்படுத்திய கவியரசு கண்ணதாசன் கலைஇலக்கியப் பேரவைத் தலைவர் கவிஞர் போஸ்குமார் அவர்களுக்கும் மற்றும் அந்த அமைப்பைச் சேர்ந்த கவிஞர்கள்

அனைவருக்கும் என் நன்றி.

இந்நூலுக்கு அணிந்துரை அளித்துள்ள திருக்குறள் சேட் அறநெறிச் செல்வர் S. கிருஷ்ணசந்த சோர்டியா அவர்களுக்கும் பாவலரேறு பெருஞ்சித்தனார் அவர்களுக்கும் என் நன்றி.

தேசியவாதி இரணியல் கே.நாகேந்திரன் அவர்கள் நடத்தும் ஹாஸ்டல் இண்டியாவில் என்உடன்தங்கியிருந்து என்னை உற்சாகப் படுத்தும் நண்பர்களுக்கும் விடுதி உரிமையாளருக்கும் என் நன்றி.

என்னுடைய கவித்திறமையை நானே அறியாமல் இருந்தபோது ஆசிரியரின் நிலையிலிருந்து என்னை உற்சாகப்படுத்திய N.E.C.யின் கல்லூரி நண்பர்களுக்கும், இலக்கியத்தின் பால் எனக்கு ஈடுபாடு உண்டாக்கிய இயற்பியற் பேராசிரியர் கே. இளங்கோவன் அவர்களுக்கும் என்னுடைய நன்றி.

என்னுடைய ஊரான காளாம்பட்டியிலும் மற்றும் சுற்றுவட்டாரத்திலும் உள்ள நண்பர்களுக்கும் உற்றார் உறவினர்களுக்கும் என்னுடைய உயர்வுக்காக எதையும் செய்யக் காத்திருக்கும் என்னைப் பெற்றெடுத்த அன்னைக்கும் நன்றி கூறி இந்த நூலை என் தந்தைக்குக் காணிக்கையாக்குகிறேன்.

## அவையடக்கம்

நொய்தின் நொய்ய யென்புன் னறிவால்
செய்திக் கவிதை யும்முடை நெஞ்சி
லெய்தென் கவிதை திரைநா வாய்போல்
வையகம் தன்னில் நிலைகொள்ள டிடுமோ

## தமிழ்

காவியக் கம்பனை தரணிக் களித்தது
வள்ளுவ மிதனால் உலகில் தழைத்தது
மேவிய கவிஞர்கள் பலரினைக் கண்டது
அமிழ்தமிழ் தென்று அறிஞர்கள் சொன்னது
நாவினிற் கின்பம் உரைக்கும் போதிலே
யெம்மொழி யிதுபோல் உலகின் மீதிலே
சாவின்றி பிறந்தவள் தாயின்றி வளர்ந்தவள்
பன்மொழியின் தாயெனினும் கன்னியிளம் மாறவில்லை

## கவியரசர் கண்ணதாசன்

திரையு லகுகண்டெ டுத்ததெய்வப் பிறவி
திருமணங் கள்முடித் தாலும்நீயோ துறவி
நரைமுடி ஞானியர்க்கும் வாரா ஞானம்
உன்கவி யில் துள்ளிவிளை யாடல் ஏனோ

கரையற்ற கவியாலே கடல மைத்தாய்
கவி ஞர்களை அதன்மீது மிதக்க வைத்தாய்
உரையெல்லாம் கவியாகும் வாய் திறந்தால்
தமிழ்த்தாயும் மனம்குளிர்வாள், நா மலர்ந்தால்

(வேறு)

கம்பன் வள்ளுவன் முதற் கொண்டு
பட்டினத் தார்கவி தமைக் கொண்டு
தம்முடை யறிவால் உமிநீக்கி
நெல்லைச் சோறாய்ச் சமைத் திட்டார்.

## பாரதியார்

பாரதனில் பாரதிபோல் புலவனை
யான்கண்ட தில்லை பாரதி
யார்தமி ழகத்தில் பிறந்த
தாலேதற் பெருமையிற் சொல்லவில்லை

போர்முரசு முழங்கும் அதன்நன்மை
விளங்கும் கேட்டதுவு மவன்சொல்லை
யாரும் கையில்வா ளேந்தாமலே
யெதிரிக ளடைந்தார் கள்தொல்லை

## வள்ளுவர்

அணுவின் கருதுளைத் தேழுலகை வைத்து
சிறுகக் கொடுத்த குறள்

## கம்பர்

நம்பர் விளையாட்டை முற்றுணர்ந்தா றுண்டோ
கம்பர் கவிப்பொருள் முற்றுணர்ந் தாரில்
செம்பிற் குள்முழு கடற்நீர் புகுமெனில்
கம்பர் கவிப்பொருள் முற்று முணர்வேன்

## பாரதிதாசன்

(கல்லூரி மேடையில் பேசியது)

பெண்ணுரிமை பேணுதற்கே
மண்ணினிலே அவதரித்தாய்
உன்பெருமை கூறுதற்கே
யென்னையிங்கு இவரழைத்தார்

படைகொண்டு நாடாண்டார் மூவேந்தர்
பாகொண்டு நமையாண்டார் பாவேந்தர்
கழுத்தினுடை மாலைக்கு முத்துரத்தினம்
பாமாலைக் கிங்குவொரு சுப்புரத்தினம்

ஆண்டவனே இல்லையென்று பெயரெடுத்தார்
மக்களே இறைவனென்று போர்தொடுத்தார்
பாமரரின் உயர்விற்கே இவருழைத்தார்
ஏழைகள் நலம்பெறவே கவிவடித்தார்

# தலைவர்கள் பாமாலை

## காந்தி

பாரினிலே பாரதத்தின் பெருமைதனை உரைத்திடவே
புதல்வன் ஒருவன் பிறந்திட்டான்
கார்மேகம் கருணையுடன் மாநிலத்து மக்களுக்கு
கனிந்திரங்கி மழை பெய்வதுபோல்
பேர்சொல்ல நீதியின் பேர்சொல்ல பிறந்திட்டான்
பார்புகழும் மகானாய் வளர்ந்திட்டான்
போர்பந்தர் என்னும் புண்ணியச் சிற்றூரில்
புத்திலிபாய் மகனாக அவதரித்தான்

நாடெனும் கோவிலினில் மக்களெனும் தெய்வம்பொருட்டு
அவர்செய்த சேவையினால் இவ்வறிய
வீடெனும் பார்போற்றும் பொக்கிசத்தை கடைநொடியில்
இறைதிரு நாமம்சொல்லி யவர்பெற்றார்.
காடுசென்று தவக்கோலம் தான்பூண்டு தவமிருந்து
இறைவனின் நாமத்தையெப் போதுமுரைத்து
பாடுபட்டு பிறவிக்கடல் நீந்துவதினும் இம்முறை
அனைவர்க்கும் நன்முறை யன்றோ.

(வேறு)

மறத்தால் வெல்லும் இவ்வுலகில்
அறத்தால் வெல்ல வந்தாயே
புறத்தே அகத்தே வேறன்றி
உண்மை ஒன்றே சொன்னாயே
கரத்தே ஆயுதம் கொண்டோரை
அன்பால் நீயும் வென்றாயே
சிறப்பாய் அகிம்சையைக் கையாண்டு
இம்சை தோற்கக் கண்டாயே

வானம் பார்த்த மண்ணொன்றே
மானம் காக்கும் மண்ணென்று
நாளும் உழைத்து பசியுடனே
வாடும் ஏழைகள் நலம்பெறவே

சாலச் சிறந்த கைத்தொழிலை
வாழநீயும் வகுத்திட்டாய்
ஞாலம் புகழ அத்தொழிலை
உன்னுடைதிறத்தால் வளர்த்திட்டாய்.

## நேரு

செங்கமலச் செல்வனடா
சமத்துவமே சொல்வ(ா)னடா
தங்கமகன் இந்தியாவின்
அறியதவப் புதல்வனடா

காந்தியுடை வலக்கரமாம்
அரசியலின் இலக்கணமாம்
ஏந்திநின்ற அவர்கொள்கை
சாந்தமதைத் தந்திடுமாம்

ஐந்தாண்டுத் திட்டம்போல்
பலதிட்டம் அவர்தொகுத்தார்
இந்தியாவின் விரைவான
வளர்ச்சிக்கு வழிவகுத்தார்

செழிப்புடனே விவசாயம்
பெருகிடவே திட்டமிட்டார்
தொழிலாளர் நலனுக்கு
பரிவுடனே சட்டமிட்டார்.

## காமராசர்

சிவகாமி மகன் செயலை
புகழாத உள்ள மில்லை
அகலாத அவர் புகழை
பகராத நாவு மில்லை

சொல்லால் உயர்ந்தவர்
சுயநலம் மறந்தவர்
கல்லாப் பெரியவர்
கல்விக் குரியவர்
தள்ளா வயதிலும்
தரணிக் குழைத்தவர்
எல்லோர் மனதிலும்
தமக்கிடம் பிடித்தவர்

புத்தகம் தூக்க வேண்டிய வயதில்
முக்கொடி தூக்கிய முதும்பெரும் வீ ரர்
நித்தம் நித்தம் சுதந்திரம் வேண்டி
சத்திய நெறியில் போரினைத் தூண்டி
நாட்டிற் குழைத்த நல்லவ ரிவரே

எழுத்தாணி ஏந்தும் கைகள்
கடப்பாறை ஏந்தக் கண்டார்
புத்தகம் தூக்க வேண்டிய முதுகு
பொதிமூட்டை தூக்கக் கண்டார்

நித்தம் வறுமையில் வாடும் சிறுவர்
புத்தகம் கற்று புத்துயிர் பெறவே
அத்தனை ஊரிலும் பள்ளிகள் அமைத்தார்.
அவர் பசி போக்க மதியம் சமைத்தார்.

கல்லாதார் இல்லாத பாரதத்தை காண்பதற்கு
எல்லாரும் எல்லாமும் பெற்றிங்கு வாழ்வதற்கு
பொல்லாத பூமியிலே நால்வராய் பெயரெடுத்தார்
வெல்லாத செயலில்லை என்றிவரும் புகழ்பதித்தார்

பொருளினைத் தேடார்
துயரினில் வாடார்
வறுமையில் வாழ்ந்தார்
வாழ்க்கையில் தேர்ந்தார்

ஏழைகளின் ஈசர்
எமதுகாம ராசர்
தீயவர்க்கு சூரர்
செயலில்கர்ம வீரர்

படிக்காத மேதை
வகுத்திட்ட பாதை
படித்திட்ட பலரும்
போற்றிட்ட பாதை.

## நம்நாடு

இமயம்முதல் குமரிவரை எங்களுடை நாடு
எவருமிங்கு இளைத்தவர்கள் இல்லையென்று கூறு
பார்புகழும் சரித்திரத்தை கொண்டநல்ல ஏடு
மார்புதட்டி அதன் புகழை நீயுமேன்றும் பாடு

அனைவருமே ஒற்றுமையாய் வாழும் பண்பாடு
மனிதர்களாய்ப் பழகிடுவார் நாளும் அன்போடு
காலனையும் காலடியில் மிதிக்கும் வீ ரமிங்கு
மாநிலத்தில் இந்தவீ ரம் வேறுஎங்கு உண்டு

பாரதியும் தாகூரும் கம்பனுடன் வள்ளுவனும்
பாவி னிலே நிகரற்ற கவி யரசும் அவதரித்த
மாபெரும் நாடு இதன்புகழ் பாடு

சத்தியத்தின் காந்தி வந்த
புத்த வந்து புத்தி தந்த
தத்துவ வி வே கானந் தனை
பெற்றெடுத்த நாடு இதன்புகழ் பாடு

## இல்லை சாதி

சாதி மதங்கள் வேறுபாடில்லை புண்ணியபாரத பூமியிலே
அனைத்து மதங்களும் ஒன்றே உரைக்கும் வேறுபட்டாலும்
சாமியிலே
வீ திக்கு வீ திசாதிகள் வைப்போர் அறிவில்லாத முட்டாள்கள்
சாதிக்கு சாதிந்திகள் வைப்போர் அதற்கும்மேலே
முட்டாள்கள்.

# நினைவில் நின்ற கனவு (சிறுவருக்கு)

விண்ணில் குடும்பம் நடத்திடுவோமே
விந்தைகள் பலவும் புரிந்திடுவோமே
மண்ணின் வளத்தை மாற்றிடுவோமே
மந்திரங்கள் உண்மை யாக்கிடுவோமே

அணுவின் பயனை அடைந்திடுவோமே
அவற்றின் அழிவினைப் போக்கிடுவோமே
அணைகள் பலவற்றைக் கட்டிடுவோமே
அதனால் விளைவினைப் பெருக்கிடுவோமே

கங்கை காவிரி இணைத்திடுவோமே
எங்கும் வளத்தினை கண்டிடுவோமே
அங்கம் வலிக்க உழைத்திடுவோமே
அனைவரும் செல்வம் பெற்றிடுவோமே

நம்பழமை தன்னை நினைத்திடுவோமே
அதற்கும் மேலே உயர்ந்திடுவோமே
நம்உழைப் பினையிங்கு காட்டிடுவோமே
தரணியைக் காலினில் போட்டிடுவோமே

நீதியின் வழியினில் நடந்திடுவோமே
சோதனை வரினும் ஏற்றிடுவோமே
காதினை அனைவரும் தீட்டிடுவோமே
உயர்ந்தவர் கொள்கையால் உயர்ந்திடுவோமே

## இந்தியத் தாயுடன் கற்பனையில் பேசுதல்

இமயமே முடியாக குமரியே அடியாக
கொண்ட எந்தன் தாயே
இருபுறமும் கடல் குழலை
ஏன் விரித்தாய் நீயே !(வங்கக்கடல், அரபிக்கடல்)
சுருங்கு வயிற்றால் சுரண்டலரசால்
கங்கைக் கண்ணீர் வடிக்கின்றாய்
திரௌபதி போல் கண்ணகி போல்
சபத மேதும் எடுத்தாயோ?

### இந்தியத்தாய் பதிலுரைத்தல்

சுரக்குமென் கங்கை கண்ணீரால்
பயிர் எங்கும் செழிக்குதடா
விரிந்தயென் கடல் குழலால்
கப்பல் பல மிதக்குதடா
சுருங்கு வயிற்றை விரித்திடுநீ
சுரண்டல் அரசை அழித்திடுநீ

## காந்தியின்று இருந்தால்

முக்கால் உடையைப் பார்த்தவரே
முழுங்கால் அளவு உடைஉடுத்தார்
இக்காலத் திரைப்பெண் உடைகண்டால்
உடுப்பாரோ இல்லை மாட்டாரோ

# அரசியல்

ஊழலற்ற கட்சிஒன்றை பார்க்க வேண்டுமே
உழலுகின்ற மக்களினைக் காக்க வேண்டுமே
ஊழலிங்கே கட்சிகளின் உடன் பிறப்போடா
ஊழலற்ற கட்சிக்கிங்கே அவ மதிப்போடா

வெள்ளை சிகப்பு பச்சையாலே கொடியினை யமைத்தார்
இந்தியாவின் கொடியினுடை நிறத்தினைப் பிரித்தார்
கொடியினிலே நிறம்பிரித்தால் குற்றங்கள் இல்லை
நாட்டினிலே இனம்பிரித்தால் பொறுப்பது மில்லை

(வேறு)

சட்டசபையில் சண்டை யிடுவார்
கட்டுக்கடங்கா செயலும் புரிவார்
திட்டம்திட்டி யிவர்நம் நாட்டைக்
கட்டிக்காப்பது நடப்பது தானா ?
சாந்தம் என்ற கொள்கையைப் பிடித்த
காந்தி பிறந்த இப்பொன் நாட்டில்
வாதினைக்காட்ட வேண்டிய இடத்தில்
போரினைக் காட்டிடு வதுவும் முறையா ?

ஓடிஉழைக்கும் பாமரரோ பசியுடன் இங்கே
ஆடிக்களித்து லஞ்சங்களைப் பறிப்பவர் அங்கே
காந்தியுடை தேசத்திலே சுதந்திரம் எங்கே.

## இன்றைய கொடுமை

சாதிகள்இங் கிலைஎன்றே சொல்வார்

பள்ளியில்சாதி யென்னெனக் கேட்பார்

நீதிகள்யாவர்க் கும்ஒன்றே என்பார்

அறிவுடையோரை சாதியால் தள்வார்

வரதட்சனையைக் கேட்டே முடிப்பார்

தரவில்லையெனில் பெண்ணை யடிப்பார்

பரம்பரையாக வந்த பழக்கம்

என்றுசொல்லி அளிப்பார் விளக்கம்

இந்நிலைஇங்கே மாறுதல் என்றோ

நல்லவர்முன் னேறாததும் நன்றோ

நன்னிலைஒன் றினைநாம் காண்போமே

ஒன்றாய்நா மினிமுயன் றிடுவோமே

## என்தமிழ்க் காதல்

உயிரே போய்யினும் உடலே சாய்யினும்

வெற்றிபெறும் வரைநாம் ஓய்யோமே

கதிரே தேய்யினும் ஒளியே போய்யினும்

என்தமிழ்க் காதல் மாறிடுமோடா

# காந்தியே சுதந்திரம் ஏனளித்தாய்

காந்தியே சுதந்திரம் ஏனளித்தாய்
அடைந்திட்டோமென நீகளித்தாய்
சாந்தத் திற்குளங்கே சுதந்திரம்
கொலையும் கொள்ளையும் தானே நிரந்தரம்

நல்லவர்க்கு வாழ்க்கை இல்லை
வல்லவரால் வந்த தொல்லை
நாட்டிற் குதிரம் கொட்டினரன்று
எதிராய் உதிரம் கொட்டினரின்று

வெள்ளைத் துண்டு கழுத்தினிலே
கொள்ளை எண்ணம் மனத்தினிலே
சொல்லும் வாக்கு தேர்தலிலே
தொண்டர் கையைத் தட்டிடவே

சொல்லுவதைச் செய்வதில்லை
கேட்ப் பதற்கும் நாதியில்லை
செல்லும் பாதை யறியாமல்
செல்லு கின்றார் அரசியலில்.

# விவேகானந்தர்

கன்னித் தமிழ்நாட்டின்
கடல் எல்லை குமரியிலே
தனித்திருந்து தவமிருந்து
இளர்த்தெழுந்து புறப்பட்டு
சிக்காகோ நகரினிலே
சிங்கமென கர்ஜித்து
எக்காலு மழியாத
இந்துமத சிறப்புரைத்து
வெள்ளையனின் கைப்பிடியில்
வெள்ளாடாய் இருந்தவரை
வேங்கையென மாறவைத்தார்
விவேகானந்தர்

இந்துமத தீபம்
இன்னலுறும் நேரம்
மின்னலென வந்த
ஞானஒளி பீடம்
தென்கடலின் மீது
நீந்திவந்த தோணி
இந்துமதம் வாழ
தன்னைதந்த ஞானி

மீசையில்லா வீரர்
இந்துமத தூதர்
காசினியே புகழும்
பாரதத்தின் பாலர்
பேசிவந்த பேச்சு
வீரநதியின் ஊற்று
அவர் வழியில் சென்று
வெற்றியினை ஈட்டு

## பொங்கல்

முக்கனியாய் சர்க்கரையாய்
முழுநீளச் செங்கரும்பாய்
எக்கணமும் இன்பமுடன்
வாழ பொங்கல் வாழ்த்துக்கள்

உச்சிவெயில் சூரியன்போல்
ஒளிகொடுக்கும் வயலுடலை
பச்சைநிறச் சேலையென
பயிரினங்கள் மறைத்திருக்க
அச்சுவெல்ல செங்கரும்பாய்
அவள் பேச்சு இனித்திருக்க
முச்சங்கச் செந்தமிழாய்
முந்திவந்து சுவைகொடுக்க

அத்தை மகள் வந்தாள்
அத் தை மகள் வந்தாள்

செவ்விதழை இணைத்தது போல்
செவ்வாழை கொலுவிருக்க
ஜவ்வாதும் சந்தனமும்
மணம்கொடுத்து மதிமயக்க
வவ்வாலின் விழியினைப் போல்
விளைந்த நெல் மணியிருக்க
இவ்வாழ்வில் எதிர்பாத்த
அத்தனையும் வந்ததுபோல்

அத்தை மகள் வந்தாள்
அத் தை மகள் வந்தாள்

மங்கையரின் அங்கமென
செங்கதிரோன் பொங்கியெழ
திங்கள்முக மங்கையரின்
தங்கநிறக் கைகளிலே

எங்குமணம் வீசுகின்ற
பூஜைமலர் அமர்ந்திருக்க
எங்களுக்கும் வாழ்வளிப்பாய்
என அவர்கள், வேண்டிநிற்க

அத்தை மகள் வந்தாள்
அத் தை மகள் வந்தாள்

கன்னியவள் இடையினைப் போல்
ஏழையரின் நிறையிருக்க
கரைபுரளும் விழியினைப் போல்
பணக்காரத் திமிரிருக்க
இனி இந்த நிலை இல்லை
ஏழையர்க்கும் வாழ்உண்டு
என உரைக்கும் பாவனையாய்
இவ்வாண்டின் சாதனையாய்

அத்தை மகள் வந்தாள்
அத் தை மகள் வந்தாள்

## கண்ணதாசன் புகழ்மாலை

கவியோடு கைகோர்க்கும் ராகங்களே - எங்கள்
கவியரசர் புகழ் நீங்கள் பாடுங்களே
கடல்நீரை முகர்ந்தோடும் மேகங்களே - எங்கள்
கார்வண்ண தாசன் புகழ் பாடுங்களே

செந்தமிழில் செவிகுளிர கவிதை தந்தான்
புரியாத தத்துவத்தை புரியச்சொன்னான்
தினம்கோடி கவிபாடி மனதை வென்றான் - (தன்)
உயிர்நாடி தமிழென்று உவகை கொண்டான்

காவேரிக் கரையோர நாணல்களே - எங்கள்
கன்னித் தமிழின் நாயகனைப் பாடுங்களே

காலைநேர பூபாள ராகங்களே - எங்கள்
கண்ணதாசன் புகழ் நீங்கள் பாடுங்களே

அர்த்தமுள்ள இந்து மதம் தந்ததும் அவனே
ஏசுநாதர் காவியத்தை சொன்னதும் அவனே
இப்படி நீ வாழாதே என்று வாழ்ந்தான்
உண்மையான இன்பம் எது என்று ஆய்ந்தான்

## வாரியார் சுவாமிகளின் நினைவாஞ்சலியின் போது பாடியது

செந்தமிழில் தேன்வாரி யார்தந்தார்
திருமுருக கிருபானந்த வாரி யார்தந்தார்

முந்துதமிழ்க்கவி தந்து மனத்திடை
வந்து அமர்ந்த செந்தமிழ் தேவியின்
தெய்வக் குழந்தையை இன்று இழந்து
நெஞ்சம் கலங்கி கண்கள் சிவந்து
கண்ணீர் பெருக வந்து அமர்ந்த
வாரியார் சுவாமிகள் பிள்ளைகளுக்கென்
முதல் கவி வணக்கம்

முத்து மணித்திரள் ரத்தினம்சூடிய
சக்தியின் மைந்தனை செந்தமிழ்ச் செல்வனை
நித்தமும் நெஞ்சினில் வைத்து வளர்த்த
வித்தகநின்று விண்ணிடை உள்ளார்
சத்திய நெறியினில் சரித்திரம் கண்டு
சப்த சுரங்களை தமிழுடன் உண்டு
வித்தகம் செய்த வித்தகரிவரை
இத்தரைமீதினில் யாவரும் அறிவர்

## வேறு

கட்டழகு கந்தனையே
கொட்டுகின்ற செந்தமிழில்
மெட்டுடனே பாடிவந்த
சிட்டுஇன்று சென்றதெங்கு
பட்டெனவே மேடையிலே
பரவசமாய் நகைச்சுவையை
கொட்டிவந்த குற்றாலம்
குமரனிடம் சென்றதய்யா

மண்ணினிலே அருளுரையை
மணம்கமழ போதிக்க
விண்ணினிலே உரைகொடுக்க
வேண்டுமென்று அழைத்தார்கள்
மண்ணினிலே கால் பதித்தால்
மக்களுடன் கலந்திடுவார்
என்பதனால் விண்மீதே
உயிர்பறித்துப் போனார்கள்

கல்லே கடவுளென்று
கண்மூடி பேசிவந்த
பொல்லாத காலத்தில்
போதிக்க வந்தவரே
எல்லா மக்களுமே
என்பக்கம் எனச்சொல்லி
சொல்லாலே சொக்கவைத்த
உத்தமரின் புகழ் வாழ்க

# மது விலக்கு

*பல்லவி :*

ஒரு கிண்ணத்தை ஏந்துவதேன் ஏன் ஏன் ஏன் ?
பல துன்பத்தை வாங்குவதேன் ஏன் ?

*சரணம் :*

1. இரத்தத்தை கோப்பையில் ஊற்றி வைத்து - அதை
நித்தமும் குடிப்பதேன் - உன்
சித்தத்தை கெடுப்பதேன் - நோய்
சத்தத்தை கொடுத்து தூக்கத்தை கெடுத்து
துக்கத்தை கொடுப்பதேன் - உன்
வாழ்க்கையை குலைப்பதேன்

2. கட்டிய மனைவி கட்டிலில் இருக்க
கைகளில் வேறொருத்தி - உயிர்
கொன்றிடும் நோய் உடுத்தி - அவள்
பொட்டுடன் பூவுடன் இன்பத்தில் வாழ்ந்திட
உனக்கு மனமில்லை - இதை
மறக்கும் நினைவில்லை

3. கெட்ட பின்பு ஒரு தத்துவம் சொன்ன
ஞானியின் வார்த்தையிது - கண்ண
தாசனின் கூற்று இது -
பட்டதைச் சொன்னேன் பார்த்ததைச் சொன்னேன்
இனி திருந்திடுவீர் - இல்லை
மனம் வருந்திடுவீர்.

# மதங்கள் வாழ்வது கோவிலிலா ?

மதங்கள் வாழ்வது கோவிலிலா - இல்லை
மனிதர்கள் செல்லும் கொள்கையிலா
கடவுள் வாழ்வது கல்லினிலா - இல்லை
கடமையைச் செய்யும் நெஞ்சினிலா

வாழ்க்கையின் நெறியை வகுத்திட்ட மதமே
வாழ்க்கையை குழைத்தால் வரும்பயன் என்ன
காத்திடும் வேலியே பயிரினை மேய்ந்தால்
கேட்பதற்கங்கே யார் உண்டு

பிறரின் துயரை போக்கிட எண்ணி
தானே துயரை ஏற்பவன் இறைவன்
இறைவனின் பேரினில் இன்னலைச் செய்வது
மதங்கள் கூறும் எவ்வகை நியாயம்.

# பாரதிக்கு பாமாலை

பிணம் கூட எழுந்தாடும்
பாரதியின் பாடலிலே
மணம் வீசும் நாவெங்கும்
நாமதனைப் பாடயிலே

நெருப்புக்குள் நீந்திவரும்
கருத்துக்கள் ஏந்திவரும்
வருத்தத்தை நீக்கவரும்
வரவாக வருங்கவியை
விருத்தத்தில் வடித்தெடுத்து
வீறுகொண்டு எழச்செய்தார்

ஒருபக்கம் தமிழினையும்
ஒருபக்கம் நாட்டினையும்
ஒருபக்கம் பக்தியையும்
ஒருபக்கம் காதலையும்
எப்பக்கம் பார்த்தாலும்
தித்திக்கும் கவி தந்தார்

வெள்ளையனின் ஆட்சியினை
வேடிக்கை பார்த்தவரை
வேங்கைகளாய் எழச்செய்து
விடுதலையின் வேட்கையினை
உரிமைக் குரல் ஒலியை
ஒலிக்கவைத்த கவிஞரிவர்

குயிலையும் மயிலையும்
கொஞ்சும் கிளியையும்
குழவும் முகிலையும்
கூறிய கவிஞருள்
காக்கையின் கருமையை
பாடிய கவியவர்

அரசனின் ஆண்மையை
கடவுளின் கருணையை
வள்ளலின் வண்மையை
வடித்திடும் கவிதையுள்
ஏழ்மையின் கொடுமையை
எழுதிய கவியவர்

பாரதியே பாரதத்தின்
சாரதியே வீரரிலே
ஒரதியே பாவாலே
பாரினையே மயக்கவந்த
பா ரதியே போர் முரசின்
பேரிகையே வாழிக நீ.

# குன்றேறி குடிகொண்டேனே

பொன்னென்ன பொருளுமென்ன
கந்தாஉன் அருளின் முன்னால்
குன்றேறி குடிகொண்டோனை
நினையாத நாளுமென்னாள்

முத்தமிழின் நாயகனே முருகா முருகா
முக்தியினை தந்தருள வருவாய் வருவாய்
சுற்றிவரும் சூழ்வினையை சக்தியினால் போக்கிடுவாய்
மாநிலத்து மக்களினை மனமுவந்து காத்திடுவாய்

எத்திசையும் உன்புகழை பாடும் உலகம்
உள்ளவரை உன்நினைவே நெஞ்சில் உலவும்
தேவரையும் மனிதரையும் ஒன்றாக நினைத்தவனே
தெய்வானை வள்ளியென இருவர்கரம் பிடித்தவனே

# வள்ளியின் மணவாளா

வள்ளியின் மணவாளா
வேலேந்தும் வடிவேலா
துள்ளிடும் தமிழேறி
வருவாயடா

சொல்லிடும் மொழியாவும்
சுந்தரக் கவியாக
வல்லமை யெனக்கிங்கு
தருவாயடா

இதுவேண்டும் அதுவேண்டும்
எனஏதும் வேண்டாத
நிலைவேண்டி நானுன்னை
வேண்டுகிறேன்
புகழ் வேண்டி பொருள்வேண்டி
பொய்பேசித் திரிவோரின்
நிழல்கூட தீண்டாத
வரம் வேண்டினேன்.

# புதியதோர் உலகு செய்வோம்

புதியதோர் உலகு செய்வோம்
அதன் தன்மையை இங்கு சொல்வோம்

அறிவினை மதிக்கும் உலகம்
ஆற்றலை வளர்க்கும் உலகம்
நெறிவழி நடக்கும் உலகம்
நேர்மையில் திளைக்கும் உலகம்
வறுமையை மறக்கும் உலகம்
வாய்மையில் தளைக்கும் உலகம்
சிறுமையை வெறுக்கும் உலகம்
சீர்மிகு புதிய உலகம்

மதவெறி பழிக்கும் உலகம்
மனிதனை மதிக்கும் உலகம்
நிதம்நிதம் இன்பம் தளைக்கும்
நிம்மதி யான உலகம்
இதனினும் இனிய உலகம்
எங்குமே இல்லை என்னும்
சுதந்திர மான உலகம்
சுந்தரத் தமிழின் உலகம்

வீரர்கள் நிறைந்த உலகம்
போரினை மறந்த உலகம்
நேர்வழி நடக்கும் உலகம்
நேசத்தை வளர்க்கும் உலகம்
கூர்விழி மாந்தர் இருளை
தனிமையில் கடக்கும் உலகம்
ஏர்வழி செல்லும் உழவர்
ஏழ்மையைத் துறக்கும் உலகம்

# அன்னையே தெய்வம்

*பல்லவி :*

அன்னையின் அடியே
ஆலய மாகும் - அவள்
அன்பின் மொழியே
அருள்மறை யாகும்.

*சரணம் :*

1. உணவினை இழந்து
உறக்கத்தை மறந்து
உனையே நினைந்து
உயிரினில் கலந்து
வாழ்ந்திடும் வாழ்வே காவியமாகும்
வாழ்த்திடும் வாழ்த்தே பேரின்பமாகும்

2. மழலையின் மீது
மலர்விழுந் தாலும்
இடியென நினைத்து
எடுத்திடும் கரமே
தேவையை தீர்க்கும் அட்சய கலசம்
பாதையை காட்டும் அன்பின் வெளிச்சம்

3. ஆயிரம் உறவுகள்
தொடர்ந்து வந்தாலும்
அன்னையின் உறவே
வாழ்க்கையின் தொடக்கம்
பின்வரும் உறவை அறிமுகப்படுத்தும்
பிள்ளையின் வாழ்க்கை வளம்பெற நினைக்கும்.

# மலையழகு

கல்வெட்டி அதனுள்
வெல்வெட்டு மெத்தையை
பதித்தது போலே புல்தரைகள்

வெண்பட்டு மேகத்தை
தழுவிடத் துடித்து
உணர்வுடன் மேலே எழும் மலைகள்

ஏற்றமும் இறக்கமும்
வாழ்க்கையின் நியதி
என்பதை உரைக்கும் அலைத்தொடர்கள்

காற்றுடன் கலந்து
இசையினை வழங்கும்
பாணர்கள் போலே பூங்குயில்கள்

நாற்றதன் அசைவே
நாட்டிய மாக
ஜதிசொல்லி ஓடும் மானினங்கள்

சூட்டுடன் துடிக்கும்
மலைமகள் மேனியை
ஆற்றிட ஓடும் நதித்துறைகள்

# எத்தனை பருவம்

*பல்லவி :*

ஒரே உடல் ஒரே உயிர்
எத்தனை பருவம் எத்தனை உருவம்

*சரணம் :*

1. பால் குடிக்க அன்னையினை நாடுகின்ற ஒரு பருவம்
பழகியாட பிள்ளைகளை தேடுகின்ற ஒரு பருவம்
பால் உணர்வின் ஆரம்பத்தை அறிகின்ற ஒரு பருவம்
பாவையரே தெய்வமென்று அலைகின்ற ஒரு பருவம்

2. திருமணத்தின் சுகம் கண்டு மகிழ்கின்ற ஒரு பருவம்
திருமணமே சுமையென்று வெறுக்கின்ற ஒரு பருவம்
வரும் மகனை மனம் கொண்டு அழைக்கின்ற ஒரு பருவம்
வந்த பின்னால் செலவென்று நினைக்கின்ற ஒரு பருவம்

3. வளர்ந்துவிட்ட மகனைக்கண்டு மகிழ்கின்ற ஒரு பருவம்
அவனுக்கென்று மணம்முடிக்க அலைகின்ற ஒரு பருவம்
தளர்ந்துவிட்ட பின்னாலே தவிக்கின்ற ஒரு பருவம்
தள்ளாடித் தள்ளாடிப் பாடுகின்ற ஒரு பருவம்.

# அன்பு ஒளி

அகிலமெல்லாம் அன்பு ஒளி வீசவேண்டும்
அனைவருமே அன்புமொழி பேசவேண்டும்
பகிர்ந்தளிக்கும் பண்பு இங்கு வளரவேண்டும்
பொதுவுடமைச் சமுதாயம் மலரவேண்டும்

உழைக்கும் கரங்கள் உலகினையே ஆளவேண்டும்
உண்மையான அன்புஎன்றும் வாழவேண்டும்
செழிப்புடனே பூமி சொர்க்க மாகவேண்டும்
சிந்தனையில் நல்லவையே ஏறவேண்டும்

பேசுகின்ற வார்த்தையிலே கனிவு வேண்டும்
பெரும் வாழ்வு வந்தாலும் பணிவுவேண்டும்
பாசம் நம்மை ஒன்றாக இணைக்கவேண்டும்
பகமையான நினைவு நெஞ்சில் நிலைக்கவேண்டும்

முடியுமென்ற நம்பிக்கை பிறக்கவேண்டும்
முயற்சிக்கு உரியபலன் கிடைக்கவேண்டும்
நடப்பதெல்லாம் நல்லவையே நடக்கவேண்டும்
நாளை உலகு நமது என்று நினைக்கவேண்டும்

# சொர்க்கமும் நரகமும் மனதிலே

*பல்லவி:*

சொர்க்கமும் நரகமும் மனதிலடா - இந்த
சொற்களை உணர்ந்தால் அமைதியடா

*சரணம்:*

மணலையே பாயாக்கி
மனமகிழ தூங்குகிறார் - சிலர்
மணிபதித்த கட்டிலிலே
மனம்வெந்து ஏங்குகிறார்.
கூழைக்கூட அமுதாக்கி
குடிப்பவரும் இருக்கின்றார் - சிலர்
பாலைக்கூட விசமாக
பருகிஉணவை வெறுக்கின்றார்
மண்ணுதிரும் குடிசையிலும்
சொர்கத்தினை காணுகிறார் - சிலர்
பொன்பதித்த மாளிகையில்
நரகவாழ்க்கை வாழுகிறார்.
உடலுக்கு சொர்க்கம்தந்து
உள்ளத்தை நரகமாக்கும்
மடையர்களின் வாழ்வை விட்டு
மனைதநீ இழுத்துக்கட்டு

# நதிபோல நெளியும் இடையோ

**ஆண் :**

நதிபோல் நெளியும் இடையோ
நாணிச்சிவந்த இதழோ
கொடிபோல் படரும் உடலோ
கொண்டல் உந்தன் குழலோ

வில்லென வளைந்த புருவம்
வியக்கும் இளமைப் பருவம்
சொல்லிய சொல்லோ அமிர்தம்
சொர்க்கம் உன்னுள் உதயம்

**பெண் :**

நடையில் நீயோ சிங்கம்
தந்தேன் எந்தன் அங்கம்
தொடுவாய் அங்கம் எங்கும்
தொடரும் இன்பம் பொங்கும்

**இருவரும் :**

பனிபோல் குளிர்ந்த முகமோ
பயத்தால் நடுங்கும் அகமோ
இனிமேல் என்றும் சுகமோ
இதுபோல் இன்பம் வருமோ

# துயருக்குக் கலங்காதே

முடியும் என்றால் முடிந்துவிடும்
முயற்சியின் வாழ்வு விடிந்துவிடும்
தடியடி தாங்கினும் கலங்காமல்
தங்கள் முயற்சியைக் காட்டியதால்

முடிவாய் சுதந்திரம் நாம்பெற்றோம்
முந்திய நாட்டின் தலைவர்களால்
விடிவெனும் வாழ்க்கையின் சூரியனாம்
முடியும் என்ற நம்பிக்கை

மனம்தான் எதற்கும் காரணம்
மனிதா அதைநீ ஆளனும்
தினம்தினம் துயரால் உருகுவதா
தீயெனும் துயரில் கருகுவதா

துயர்படவே யிங்குநாம் பிறந்தோம்
கலங்குவதாலே என்னபயன்
உயிருக்கு பயந்தவன் போருக்கேன்
துயருக்கு பயந்தவன் பாருக்கேன்

## உலகம் சொல்வது சொல்லட்டும்

உலகம் சொல்வது சொல்லட்டும்
ஊரே தள்ளினும் தள்ளட்டும்
நல்வழி எவ்வழி அவ்வழியில்
என்றும் சென்றிடு என்மனமே

படிப்பில் மேதையை இவ்வுலகம்
புத்தகப் புழுவென ஏசிடுமே
பண்பாய் எங்கும் நடப்பவரை
பயந்தவர் என்று பேசிடுமே

எதையும் தாங்குமிதயம் கொண்டால்
கல்நெஞ்சக் காரனாய் தூற்றிடுமே
எதற்கும் இரக்கம்நாம் கொண்டால்
கோழையாய் உலகம் மாற்றிடுமே

உடலினைப் பார்ப்பவர் உள்ளத்தைப்
பார்த்தால் உலகம் மாறிவிடும்
அழகினைப் பார்ப்பவர் அறிவினைப்
பார்த்தால் அகிலம் திருந்திவிடும்.

# என்னடா உலகமடா

என்னடா உலகமடா
இல்லார்க்கு நரகமடா
இருக்கின்ற மனிதருக்கோ
இதுதானே சொர்க்கமடா

சொர்க்கத்தையும் நரகத்தையும்
பூமியிலே காணுகிறார்
நாள்முழுதும் உழைத்தாலும்
ஏழைகள் ஏன்வாடுகிறார்

நாள்முழுதும் உழைப்பவனோ
பட்டினியால் வாடுகிறான்
அவனுழைப்பால் மாளிகையில்
அங்கொருவன் வாழுகிறான்

உழைப்பவர்கள் உயர்வதில்லை
உயர்ந்தவர்கள் உழைப்பதில்லை
உழைப்பாளினி உயர்வாரோ
உயர்ந்தவர் வழிவிடுவாரோ

# சிந்தனைச் சிதறல்

சுவைமிக்க முக்கனியை தோலாலே காத்திட்டாய்
கள்சுரக்கும் மலரைநீ முள்ளாலே காத்திட்டாய்
ஒளிகொடுக்கும் நிலவைநீ தூரத்தால் காத்திட்டாய்
அழகொழுகும் பெண்களைநீ எதனாலே காப்பாயோ

வீடிங்கே அழுக்கானால் வெள்ளை யடித்திடலாம்
உடையிங்கே அழுக்கானால் எளிதாய் வெளுத்திடலாம்
மேனி அழுக்கானால் குளியலில் போக்கிடலாம்
உள்ளம் அழுக்கானால் என்னதான் செய்வதடா

சோறு கொதித்தால் பசியாறும் - நம்
நெஞ்சு கொதித்தால் என்னாகும்

மேகநீர் சுரந்தால் புவிசெழிக்கும் - நம்
சோகநீர் சுரந்தால் எதுசெழிக்கும்

எழுவதில் தவறிவிட்டால் எளிதாய் அழித்திடலாம் - நாம்
பழகுவதில் தவறிவிட்டால் எதனாலே அழிப்பதடா

தாக்கிப் பகைதீர்ப்பது விலங்கின் குணம்
பேசிப் பகைதீர்ப்பதே மனித இனம்

சமுதாயத்தால் மாறுவோன் இங்கு தனிமனிதன்
சமுதாயத்தையே மாற்றுவான் தானே பெருந்தலைவன்

வெற்றிக்குக் காரணம் மனது
உழைத்தால் வெற்றி உனது

ஆண்பெற்ற கல்வி அவனோடு நிற்குமடா
பெண்பெற்ற கல்வியால் குடும்பமே கற்குமடா

விலங்கில் இருந்து சிறிதுகற்று மனிதனாகினான்
பலவும் கற்று மனிதனின்று விலங்காய் மாறினான்

## கங்கையும் காவிரியும் இணையட்டும்

கரைதாங்க முடியாமல் கங்கை
அங்கு புரளுதடா
வறண்டு இங்கு காவிரியும்
நீரின்றி உலருதடா
இரண்டு மிங்கு இணைந்திட்டால்
நாட்டில்வளம் பெருகுமடா
மிரண்டு நின்ற உழவருள்ளம்
மகிழ்ச்சியிலே உருகுமடா

## கிரிக்கெட்

வேகமாக பாய்ந்து வரும்பந்து
விக்கெட்டை எடுக்க வரும் குண்டு
போகுமதை சிறியபேட்டு கொண்டு
தடுப்பதிலும் வீரம்மிக உண்டு

திடலென்னும் கட்டிலிலே
உடையென்னும் பயமகற்றி
பந்தென்னும் பெண்ணுடனே
எந்தனுடை பேட்டாலே
யான்கொண்ட காதலினால்
வந்ததுதான் ரன்பிள்ளை

## பொய்யும் புரட்டும்

பொய்யும் புரட்டும் நிறைந்த உலகில்
உண்மை கண்ணுக்குத் தெரியாது
உள்ளத்தில் உள்ள உண்மைகள் எல்லாம்
உதட்டினில் வருவதும் கிடையாது

ஆண்டவன்வந்து உண்மையைக் கூறினும்
அகிலம் ஏற்றுக் கொள்ளாது
ஆங்கொரு சாட்சியை அகிலம் கேட்கும்
அல்லது உண்மையும் செல்லாது

தரத்தின் தன்மையை மதியாஉலகம்
விளம்பரத் தாலே வாழ்கிறது
திறத்தின் தன்மையை அறியாஉலகம்
செல்வாக்காலே வீழ்கிறது.

## வேலையில்லா திண்டாட்டமும் தேவையும்

ஏர்பிடிக்கா உழவரிங்கு
ஏற்றமில்லை யென்கின்றார்
வேர்வைசிந்தா தொழிலாளர்
வேண்டும்பணம் யென்கின்றார்

ஊர்முழுதும் சுற்றிக்கொண்டு
ஒருவேலை யில்லைஎன்றால்
பார்ப்பவர்தான் முட்டாளோ
தேடில்வேலை வாராதோ

இலக்கியமும் அறிவியலும்
இந்நாட்டின் இருகண்கள்
தலைசிறந்த இலக்கியங்கள்
திறமுடனே இங்குண்டு

உலகறிந்த அறிஞர்களோ
உள்ளாரே பலரிங்கு
கலைபோலே அறிவியலும்
காணட்டும் முன்னேற்றம்

# இளைஞர்களே கொதித்தெழுங்கள்

இளைஞர்களே கொதித்தெழுங்கள்
துயில்நீக்கி விழித் தெழுங்கள்
வெள்ளையன் ஆண்ட நம்நாட்டை
கொள்ளையன் இன்று ஆளுகிறான்

மக்களாட்சி என்ற பேரில்
மன்னராட்சி நடக்குது
அவரவர்கள் குடும்பமட்டும்
ஆட்சியிலே செழிக்குது

பணத்தினை மதிக்கும்
திறத்தினைத் தடுக்கும்
அடுத்தவர் உழைப்பை
அடைந்திடத் துடிக்கும்

மேனாட்டு அறிஞர்கூட
வியக்கு மறிவுஇங்கு
ஆனாலும் முன்னேற்றம்
நம்நாட்டில் எங்கு

வானெட்டும் மலையுண்டு
வளம்கொழிக்கும் வயலுண்டு
தேனோடும் நதியுண்டு
திறம்கூட்டும் உழைப்பில்லை

## முன்னோரின் சாதனைகள்

விண்ணில் பறக்கும் விஞ்ஞானத்தை
அன்றே கம்பன் கவியில் சொன்னான்
மண்ணில் மாமழை பெய்யும்வித்தை
கோதை பாட்டில் பாடிச்சென்றாள்

கண்ணறியா அணு வினையே
கண்டன்று ஔவை சொன்னாள்
எண்ணில்லா அறம் கூறும்
வள்ளுவனின் புகழ் வரையில்

சித்தரவர் செய்து வைத்த
வித்தைகளை எண்ணி எண்ணி
நித்தம் நித்தம் சிந்தித்து
நிற்கின்றார் அறிஞர் இன்று

எத்தனையோ கவிஞர் அறிஞர்
என்று நாம் பெற்றிருந்தும்
மற்றநாட்டு அறிஞர் போலே
மண்ணிலின்று புகழில்லை

# காதலே வாழ்க்கையென்றால்

காதலே வாழ்க்கையென்றால்
கண்ணீர்தான் மிச்சமடா
வாழ்க்கையிலே காதலென்றால்
வளம்கோடி மிஞ்சுமடா

இராமன் சீதை அல்லஅடா
கண்டவுடன் காதல்கொள்ள
காமன்விட்ட கணைகளுக்கு
கண்ணாலே பதிலும் சொல்ல

காதலை வாழவைத்து
காவியமாய் ஆனவர்கள்
வாழ்க்கையை இழந்துவிட்டு
பாதியிலே மாண்டார்கள்

காதலை வாழவைக்க
வாழ்க்கையை இழப்பேனா
உள்ளத்திலே கோவில்கொண்ட
உமையவளை மறப்பேனா

# எது நாகரீகம் :

நாகரீகம் என்றபேரில் நல்லதெல்லாம் மறந்தாரே
மேல்நாட்டுப் பண்பாட்டுச் சேற்றினிலே விழுந்தாரே
படிப்பினாலே வருவதல்ல நாகரீகம்
பண்பினாலே வருவதுதான் நாகரீகம்

கடற்கரையில் பெண்மடியில் தலைவைப்பார்
காமத்தினை தீர்ப்பதற்கு விலைவைப்பார்
கேட்கும்போது காதலென்று சொல்லுவார்
கரையிழந்த நதிபோல செல்லுவார்

இரைச்சலையே இசையாக்கி மகிழ்ந்திடுவார்
குதிப்பதனை நாட்டியமாய் ரசித்திடுவார்
இருக்கின்ற கலைஉணர்வை அழித்திடுவார்
கலைஉணர்வு குறைந்ததென்று பழித்திடுவார்

கண்டவுடன் காதல்கொண்டு இணைந்திடுவார்
கருத்துவேறு பாடுயென்று பிரிந்திடுவார்
பன்றிபோல நாய்போல கலப்பதற்கு
கல்யாணம் என்கின்ற சொல்லெதற்கு

வெள்ளையரின் கையிலிருந்து நாட்டை மீட்டோம்
முன்னவர்கள் காட்டியபண் பாட்டை மீட்போம்
அறிவுள்ள விலங்குகளாய் மாறலாமா
அறிவியலை அழிவியலாய் மாற்றலாமா

# பெண்ணழகு

தேன் தவழும் மலரோ நீ;
தேவலோக ரதியோ நீ;
வான்தவழும் நிலவோ நீ;
வண்ணமயில் சிறகோ நீ.

மான்தவழும் விழியோ நீ;
மாலைவரும் கதிரோ நீ;
ஊன்தவழும் உயிரோ நீ;
உலகாளும் கலைவாணி.

கான்தவழும் குளிரோ நீ;
கண்ணகியின் உருவோ நீ;
வேன்(ல்) தவழும் விழியாலே;
வேண்டியதை சொல்வாய் நீ.

மீன்தவழும் கொடியோ நீ;
மீண்டுவந்த சிலையோ நீ;
நான்தவழும் உன்மேனி;
நடுங்குவதேன் சொல்ராணி.

## காதல் பாடலில் ஊர்களின் பெயர்கள்

நெல்லை யடுக்கிய பல்வரிசை;
சென்னெய் ஒழுகும் பூங்கன்னம்;
பாவை மேனி செங்கோட்டை;
பார்வையிலே யெனக் கதுவேட்டை.

பழம்நீ யெனவே நினைத்துவந்தேன்;
பழரசம் நானும் குடிக்கவந்தேன்;
தேனீ போல கொட்டுவதேன்
தேகத்தில் தேன்மழை சொட்டுவதேன்

கொள்ளிடம் தேடி அலைந்துவந்தேன்;
குமரியின் மனதில் குடிபுகுந்தேன்.
கன்னியின் ஆடலை காண்பதற்கு
பொன்மயி லாடு துறைவந்தேன்.

கோவை இதழில் கொலுவிருக்கும்
பனியை இதழால் எடுக்கட்டுமா?
சேலம் விழியில் வழிந்தொழுகும்
மையை விரலால் துடைக்கட்டுமா?

செங்கை வாழை மடலென்பேன்;
செந்தூ ரம்உன் முகமென்பேன்;
மங்கை உனைப்போல் பூமியிலே;
மனதை மயக்குவார் யார்உண்டு?

# பெண்ணழகு

பால்போல மனம்கொண்டு:
வேல்போல விழிகொண்டு:
தேன்போல மொழிபேசும் கனியல்லவா, -நீ-
தமிழ் தந்த இன்பத்தின் நகலல்லவா.

பொதிகை வளர் செந்தமிழில்
பொருத்தி வைத்த கற்பனையை
விருத்தப்பாவில் உரைத்தகம்பன் கவியல்லவா -நீ
விருந்தெனவே விரும்பிவந்த உணவல்லவா.

கவியரசர் கண்ணதாசன்:
கன்னியரின் பேரழகை:
கனித்தமிழில் தந்துவந்த இன்பமல்லவா -நீ.
கண்ணருகே கவிபாடும் சொர்க்கமல்லவா:

காந்தியவர் வாழ்க்கையினை
கற்பனையில் குறள்வடித்த:
வள்ளுவனார் பால்ஒன்றைப் பார்ப்போமா-நாம்
வாழ்வுபெற ஆண்டவனைக் கேட்போமா?

# பெண்ணழகு

அன்னத்தின் பாதத்தை;
பொன்னினில் வார்க்க - (அதை)
பூமகள் காலுடன்;
பொருந்திடச் சேர்க்க;

மின்னிடும் இடையினில்;
மின்னலைப் பதிக்க;
மீளா இன்பத்தில்
இருவரும் மிதக்க;

கன்னங்கள் இரண்டும்
கனியாய் மாற
கண்டதும் நெஞ்சினில்;
மோகமும் ஏற;

என்மனம் முழுதும்
உன்னெழில் துள்ள;
ஏங்குது மனமோ?
திருமணங் கொள்ள.

# பள்ளியறைப் பாடல்

ஆண் :

1) மங்கையின் மார்பினில் முகம் புதைத்து;
மயக்கிடும் மாலைக்கு விடைகொடுத்து;
செங்கனி இதழில் சாரெடுத்து;
சேர்ந்திருப்போம் தினம் சுகம் நினைத்து!

2) வெண்சங்கு கழுத்தினை விரல்தடவும்;
விம்மிய கன்னத்தில் இதழ்பதியும்;
கண்களை மெல்ல இமை மறைக்கும்;
கன்னியின் உடலை கரமளக்கும்!

பெண் :

3) மன்னவன் தோளினை கரம் தழுவும்;
மங்கல குங்குமம் அதில்பதியும்;
கன்னியும் நாணத்தில் முகம் மறைக்கும்;
கண்ணனின் கரங்கள் திரைவிலக்கும்!

ஆண் :

4) கன்னியின் மேனியில் பசலைநிறம்;
காதலினால் தினம் கூடிவரும்;
பொன்கரம் இடையுடன் நடம்பயிலும்;
பூங்கொடி இடையினில் உடைநழுவும்!

## நிரை அசையால் ஆன காதல் பாடல்

குரைகடல் பெருங்கடல் வரைஇலி அலைகடல்
விழியத னிறமென இவளிடம் குடிபுக

மலையத னுருவென மறவரின் தலையென
கலைமக ளிவளிடம் கதிர்முலை மலர்ந்திட

கொடியது ஒடிந்திட இடையென படர்ந்திட
ஜடையது இடையுடன் உறவென நடமிட

திருமக ளழகினை அழகிலை யெனும்படி
மரவுரி முனிவரும் மயக்கிடும் அழகிது.

## ஆடலின் பாடல்

நாட்டிய மேகலை என்றாட - இடை;
நாட்டிய மேகலை நின்றாட;
காட்டிய அபிநயம் ஆயிரமாம் - இவள்
கண்கள் அதற்குக் காரணமாம்.

சூட்டிய மாலையின் மணம் குறையும் - கருங்
குழலின் மணத்தை நுகர்கையிலே;
பூட்டிய கைவளை ஓசையிலே - ஒரு
புல்லாங் குழலிசை தோற்குமடா?

ஏற்றிய தீபத்தின் ஒளி மங்கும் - இவள்
எழில்முகம் காணும் போதினிலே;
காற்றிடை கீற்றென இவளாட - அதை -
கண்டதும் என்மனம் உடனாட;

வீற்றிரு தாமரை மகள்போலே - இவள் -
விரல்கள் காற்றிடை மீட்டுவர;
போற்றிட வார்த்தைகள் இல்லையடா - இந்த
புலிமகள் நாட்டியம் பார்க்கையிலே.

கால்களின் அழகிய அசைவினிலும் - இவள்
கரமெனும் வாழை மடலினிலும்,
பாலெனும் பற்களின் வரிசையிலும் - ஒளிர்
பவள மெய்திய இதழினிலும்,

வேலெனும் விழியின் வீச்சினிலும் - அந்த
விம்மிய மார்பின் ஆட்சியிலும்;
நாளெனும் பொழுது நொடியாக - இந்த
நங்கையின் நாட்டியம் பார்த்திருந்தேன்.

## கடல்கண்டேன் - அவள் உடல்கண்டேன்

*பல்லவி :*

மானும் மீனும் மையலின் விழிமுன்;
தானும் உறவென தழுவிடத் துடிக்கும்;
வாளும் வேலும் வீழ்த்திடும் அம்பும்;
ஆடும் விழியின் அழகினை உரைக்கும்.

*சரணம் :*

பொன்போன்ற அவளுடனே பெண்யாரும் நில்லார்.
நின்றுவிட்டால் அந்தப்பெண்ணை அழகென்று சொல்லார்;
திருமகளின் அழகினையே உவமை சொல்ல நினைத்தேன்
அவளழகும் குறைந்திருக்க வார்த்தையின்றி தவித்தேன்.
கண்ணைக்கண்ட கண்கள் முகத்தைக் கண்டதோ
முகத்தைக் கண்ட போது உடலைக் கண்டதோ,
முடிந்தவரை அழகைக்கண்டு நானும் மயங்கி நின்றேன்.
மூடிய அழகைமட்டும் முழுதும் நான் கண்டேன்.

கடற்கரையில் நின்றுகொண்டு கடலைப்பார்க்கச்
சொன்னால்,
முழுக்கடலைப் பார்ப்பதற்கு யாராலே இயலும்?
கண்ணிற்குத் தெரியுமட்டும் கடலைப் பார்த்து நின்றேன்.
இவளழகும் அப்படியே வேறேது சொல்வேன்?

# அங்கமொரு தங்கம்

*பல்லவி :*

அங்கமெல்லாம் தங்கமுலாம்
பூசியதாரோ
செங்கனியின் சாறதனுள்
ஊற்றிய தாரோ

*சரணம் :*

1. காதுவரை நீண்டிருக்கும்
கட்டழகுக் கருவிழியே
காதினிலே தேனிறைக்கும்
இனிக்கின்ற கனிமொழியே

2. இடைமறைக்கும் உடையாக
இருக்கின்ற கருங்குழலே
இதழ்சுவைக்கும் இனிப்பாக
இருக்கின்ற கனிஇதழே

3. கூன்பிறையே தாங்கிநிற்கும்
குளிர்நிலவின் திருமுகமே
தேன்கனியை ஏந்திநிற்கும்
திருமகளின் கொடிஇடையே

4. மலரெடுத்து சரம்தொடுத்து
மாலையிட வருவாயோ?
எனைநினைத்து கரம்பிடித்து
வாழ்வுபெற வருவாயோ?

# பெண்ணழகு

பொன்னை உருக்கி
பஞ்சென விரித்து
மென்மல ரான
உடல் என்ன!

குங்குமம் எடுத்து
தேனுடன் குழைத்து
தங்கிட வைத்த
இதழ் என்ன!

அஞ்சனம் தீட்டி
அன்பினை காட்டி
கொஞ்சிடும் கோதையின்
விழி என்ன!

பஞ்சணை காண
படுக்கையும் நாண
நெஞ்சோடு சேர்க்கும்
சுகம் என்ன!

# காமவலை

*பல்லவி :*

வாணி வா நீ
என் இதயத்தில் குடிகொண்ட ராணி
என் கேள்விக்கு பதில்சொல்ல வா நீ.

*சரணம் :*

மாந்தளிர் உடலில் நீந்த-
மயக்கத்தில் கனியினை ஏந்த-
திருசுவை இதழினைத் தீண்ட
தீயென உணர்வினைத் தூண்ட

பூங்கொடி இடைநட மாட
பொன்கனி உடல்சுகம் தேட
மான்விழி மகிழ்ச்சியில் துள்ள
மஞ்சத்தில் இன்பத்தை அள்ள

இருளினில் பாடங்கள் படிப்போம்
உறவெனும் கடலினில் மிதப்போம்
மௌனத்தில் யாகத்தை வளர்ப்போம்
மயக்கத்தில் கதையினை முடிப்போம்.

கார்குழல் பாயென விரிய
கட்டிய சேலையும் கலைய
வேர்வையில் மேனியும் நனைய
விழுந்தேன் காமத்தின் வலையில்.

# கண்டுபிடிப்பு

புவியென்னும் பெட்டகத்தில்
புட்டிவைத்தான் பல உண்மை
புரிந்ததனை எடுப்பதுதான்
அறிவின் கடமை

அறிஞரென்போன் யாரென்றால்
ஆண்டவனின் உண்மையினை
அகிலம் அறியச்
செய்கின்ற ஓர்கருவி

பொறிஞரினை கேட்கின்றேன்
புவியுண்மை புரிந்திங்கு
புதிதாகப் பலகருவி
செய்திடு வீர்நன்கு

விரிகின்ற அறிவுலகில்
போட்டியிட நாமிங்கு
விரைந்தே சென்றிடுவோம்
எதிலும் வென்றிடுவோம்

அறிவிருந்தும் திறனிருந்தும்
அயராத உழைப்பிருந்தும்
அறியசோதனைச் சாலையின்றி
அறிவியலில் முன்னேற்றமில்லை

# நன்மையை நாடு

நல்லதின் வாசல் துணைபோலே
தியதன் வாசல் குகைபோலே
நல்வழி செல்வது கடினமடா
அவ்வழி செல்வதே திறமையடா
வளரும் பயிருக்கு விதைதேவை
வருகின்ற களைக்கு எதுதேவை
உலகினில் தியவை தெரிந்துகொள்ள
ஒருவரின் துணையும் தேவையில்லை
பயிரினை வளர்க்க நீர்தேவை
வளர்ந்ததைப் பறிக்க ஆள்தேவை
சுயமாய் நல்லது தெரியாது
சொல்லிட நல்லோர் சிலர்தேவை
மனதில் வளரும் எண்ணமடா
மண்ணில் அமையும் வாழ்க்கையடா
உனதுள் உறுதி நீகொண்டால்
ஒருநாள் வெற்றி கிட்டுமடா

# கண்ணாலே பேசி வந்தோம்

கண்ணாலே பேசிவந்தோம்
காதல்வலை வீசிவந்தோம்
நான்சிரிக்க நீசிரித்தாய்
ஏன்எந்தன் மனம்பறித்தாய்
கவியரசர் இல்லையடி
கவிவடிக்க உன்அழகை
அவர்தாசன் வடிக்கின்றேன்
கண்ணேஉன் பேரெழிலை
இடைகண்டு கொடியென்றேன்
முகம்கண்டு நிலவென்றேன்
நடைகண்டு மயிலென்றேன்
உன்பெயரை என்னென்பேன்

மேகத்தின் தாரகையோ
கார்குழலில் மல்லிகையும்
தேகத்தில் தேன்மழையோ
கண்டவுடன் என்நகையும்

## கண்ணிரண்டும் மீன்ஆட்சி

ஆண் : கண்ணி ரண்டும் மீனாச்சி
உந்தன் நடை மானாச்சி
சிந்தும் மொழி தேனாச்சி
உந்தனுக்கு நானாச்சி

பள்ளியறை அரசனுக்கு
உந்தன் உடல் அரசாச்சி
எந்தனுடை அரசினிலே
கண்ணுக்கினிய பலகாட்சி

பெண் : உந்தனுடை பார்வையிலே
எந்தனுடல் பாழாச்சி
உந்தனாலே எந்தன் நெஞ்சம்
கொதிக்கின்ற பாலாச்சி

ஆண் : கொதித்தவுடன் குளிர்வதுதான்
பாலினுடை பண்பாச்சி
குளிர்ந்தவுடன் குடிப்பதுதான்
நாவினிற்கு சுவையாச்சி

இருவரும் : நாமிருவர் கண்டிடுவோம்
காதலிலே ஆராய்ச்சி
நமக்காக அதற்கிங்கே
பள்ளியறை ஆறாச்சி

# காதலில் தேசியம்

பெண் : இந்துவின் கதிரேவாராய்

ஆண் : முஸ்லீமின் நிலவேவாராய்

இருவரும் : கிருஸ்துவின் தாரகையாக
ஒளிரட்டும் நம்வாழ்வென்றும்

ஆண் : காஷ்மீரத் திலகமிட்டு
கேரளத்தின் நெய்தேய்த்து
இமயம்போல் குழல்முடித்து
கன்னியே குமரியே வாராய்

பஞ்சாபின் பொன்னுடலை
தமிழகத்தின் உடைதழுவ
வங்கத்தின் கவிச்சுவையே
சங்கமம் ஆவோமா

ஆண் : நேருவின் உயிர்உன் கார்குழலில்
காந்தியின் உயிர்உன் பொன்னுடலில்

பெண் : பாரதி உயிர்உன் மூக்கின்கீழ்
பாரதம் முழுதும் கண்முன்னே

## காதல் கீதம்

ஆண் : இலையெனப் பாயினை நீவிரிக்க
உணவென உனையே நான் சுவைக்க
இருவரும் சேர்ந்து அனுபவிக்க
பெறுவது கஷ்டம் நீதானே

பெண் : இரவும் இங்கே உதிக்கட்டுமே
நிலவும் நன்கு சிரிக்கட்டுமே

ஆண் : உடையெனும் திரையினி விலகட்டுமே
உடல்கள் இரண்டும் பழகட்டுமே

ஆண் : கட்டியசேலை கலையட்டுமே
கண்களில் மையும் வழியட்டுமே
பொட்டுடன் என்முகம் பதியட்டுமே
மொட்டுடன் மலரும் உதிரட்டுமே

பெண் : மன்னவன் ஆசைக்கு அளவில்லை
இன்னும் திருமணம் ஆகவில்லை

ஆண் : இருமனமிங்கே இணைந்த பின்னால்
திருமணத்திற்கு தடையில்லை

## விழியாலே விலங்கிட்டாய்

ஆண் : உள்ளங்கவர் கள்வனுக்கு
விழியாலே விலங்கிட்டாய்
துள்ளும்என் இளமைக்கு
உன்னுடலை வழங்கிட்டாய்

பெண் : ஓர்பார்வை போதுமன்றோ
இருஉள்ளம் கலப்பதற்கு
நாள்முழுதும் கற்பனையின்
வானத்தில் பறப்பதற்கு

ஆண் : வள்ளுவனின் வாசுகியோ
கம்பனுடை ஜானகியோ
தெள்ளுதமிழ்ச் சிலம்பாலே
புகழ்பெற்ற கண்ணகியோ

பெண் : உள்ளங்கவர் காதலிநான்
வீணாக புகழ்வதுஏன்
தனைத்தானே புகழ்வதுவே
எனைநீயும் புகழ்வதுவும்

இருவரும் : மஞ்சம் விரிக்காமல்
மழலை பிறக்காது
நெஞ்சம் திறக்காமல்
வாழ்க்கை இனிக்காது

# தேய்ந்ததென்ன வெண்ணிலவே

வெண்ணிலவே வெண்நிலவே
தேய்ந்த தென்னவோ
பெண்ணிவளின் அழகைக்கண்டு
காய்ந்த தென்னவோ

வானுடனே உரசிஉரசி
தேகம் தேய்ந்ததோ - (இல்லை)
வஞ்சிமகள் அழகைகண்டு
மேனி தேய்ந்ததோ

தேகம்தேயும் அளவிலங்கு
காமம் என்னடி
மேகத்துடன் உனக்கிருக்கும்
மோகம் என்னடி

வெண்ணிலவின் வெள்ளொளியோ
மங்கைமேனி பட்டு
செவ்வொளியாய் எதிரொலிக்க
செங்கதிரைக் கண்டேன்

செங்கதிரின் ஒளியென்றால்
சுடவில்லையே
என்னஒளி எனக்கும்புலப்
படவில்லையே

## காதலின் கீதம் :

எச்சில்கூட அமுதாகும்
வசைமொழிகூட இனிதாகும்
கச்சை யெனக்குப் பகையாகும்
காற்றே நமக்கு உடையாகும்

தேனும்கூட கசப்பாகும்
திவி தழ் தேனை வசைபாடும்
கூனும்புருவம் வில்லாகும்
கொஞ்சும் விழியோ அம்பாகும்

சொல்லும் சொல்லே இசையாகும்
சுரக்கும் வேர்வை மழையாகும்
செல்லும் நிழலே நிலவாகும்
செந்தூரம்உன் முகமாகும்

மஞ்சம் ஒன்றே உலகாகும்
மல்லிகை மணமே மணமாகும்
அஞ்சும் இருளே துணையாகும்
அடுத்ததுஎன்ன தெளிவாகும்

# கொள்ளைக் கூட்டம்

கொள்ளைக்கூட்டம் ஒன்றுஇன்று
நாட்டையிங்கு ஆளுதடா
கொள்கையற்ற ஜனநாயகத்தை
கொண்டுயின்று வாழுதடா

காந்திவந்த தேசமோ
காமராஜின் தேசமோ
கயவர்களின் தேசமடா
அத்தனையும் வேசமடா

பணம்தானிங்கு பேசுதடா
மதிப்பையள்ளி வீசுதடா
திறமையினை எறியுதடா
திருட்டுத்தனம் புரியுதடா

உழைக்காத கூட்டம்ஒன்று
வஞ்சனையால் பிழைக்குதடா
உழைப்பிற்கு உயிருட்ட
நெஞ்சமிங்கு துடிக்குதடா

சட்டத்தினை மூங்கிலாக்கி
மக்களினை மூடராக்கும்
அட்டகாச அரசியலோ
என்றுயிங்கு அழியுமடா

# இலக்கியத்தில் அறிவியல்

ஆண் : ரேடியம் கண்களில் தெரிகிறது - பட்டு
இராணியின் மலர்முகம் ஒளிர்கிறது
யுரேனியம் போல்மனம் சிதைகிறது லி இந்த
உலகம் சுழல்வது புரிகிறது

இருவரும் : யாதொரு விசையுமில்லாமல்
எப்பொருளுமிங்கு நகர்வதில்லை
நான்உனை மனதில் எண்ணாமல்
எப்பொழுதுமிங்கு புலர்வதில்லை

ஆண் : வேகத்துடன் நிறைகூடின்
முடுக்கம் என்னாகும்

பெண் : முடுக்கம் மிக கூடும்

ஆண் : தேகத்துடன் நீகூடின்
இன்பம் என்னாகும்

பெண் : இன்பம் மிக கூடும்

ஆண் : ஒலியின்வேகம் கொண்டால்
சிறுதுகளும் உடல்துளைக்கும் - உன்
விழியில்வேகம் கொண்டால்
அதுஎந்தன் மனம் துளைக்கும்

பெண் : ஒவ்வொரு விசைக்கும் எதிர்விசையுண்டு
என்றுஅன்று நியூட்டன் சொன்னான்
என்மனம் இழந்தேன் உன்மனம் அடைந்தேன்
விதியின் உண்மை புரிந்து கொண்டேன்.

(வேறு)

மேல்செல்லும் பொருள்களினை
புவியீர்ப்பு விசையிழுக்கும்
ஆசைவரும் பெண்களுக்கு
நாணம்வந்து அதைத்தடுக்கும்

கம்பிகளின் வழியாக
மின்சாரம் பாயுமடி
கண்ணிரண்டின் வழியாக
எண்ணங்கள் பாயுதடி

இயந்திரத்தின் செயல்திறனோ
சோதனையில் தெரியவரும்
உயர்காதல் செயல்திறனோ
துன்பத்தில் புரிந்துவிடும்

உராய்வில்லா சாலையிலே
வாகனமும் சென்றிடுமோ
ஊடலில்லா காதலிங்கு
உவகையினைத் தந்திடுமோ.

சேலத்தில் 14.8.94 அன்று உவமைக்கவிஞர் சுரதா அவர்களின் தலைமையில் நடைபெற்ற கவியரங்கில் அஞ்சல்வழிக் கவிதையில் தமிழக அளவில் முதல்பரிசு பெற்ற கவிதை.

கற்பனையால் அளந்ததினை
    காலடியால் அளந்தவனை
சுற்றுகின்ற திங்களினை
    தொட்டுவந்து சொன்னவனை
வெற்றிடத்து மண்ணினிலே
    வேடிக்கை செய்தவனை
பற்றுடனே பாடவந்த
    பாவலர்க்கு என்வணக்கம்
கன்னித் தமிழ்நாட்டின்
    கவிஞர்கள் அனைவருமே
பெண்ணென்று சொன்னதினை
    மண்ணென்று நிரூபித்தாய்
மண்ணும் பெண்ணாக
    மாறியதெப் படியோ
இன்னும் ஆய்கின்றேன்
    இதுயென்ன கற்பனையோ

(வேறு)

கவியினில் சொன்ன
காவிய நிலவை
அறிவுடன் ஆய்ந்து
அதன்உள் நிலையை
தெளிவுறச் சொன்ன
தென்னறி வாளா
புவியினில் உன்புகழ்
நிலைகொண் டிருக்கும்

இலக்கிய நிலவை
அறிவியல் நிலவாய்
ஆக்கிய அறிஞனின்
முயற்சியைப் பாரீர்
முயற்சி செய்தால்
சூரியன் மீதும்
சுற்றி வரலாம்
முயல்வோம் வாரீர்.

# டி.டி.ஜி. தொழிற்சாலை

தரமே இதன் தாரக மந்திரம்

அசுத்தப் படுத்துவதே
ஆலைகளின் வேலையென
ஆகிவிட்ட இவ்வுலகில்

சுத்தம் செய்வதற்கே
தோன்றிய தொழிற்சாலை
டி.டி.ஜி. தொழிற்ச்சாலை

மண்ணடியில் ஓடுகின்ற
சாக்கடையின் மாசகற்ற
மான்ஸ்டர் எனும், ஓர் கருவி

இரும்பாலை உருக்கிகளில்
ஒழுகுகின்ற இரும்பகற்ற
டோர்கிளீனர் எனும் கருவி

விண்முட்டும் கோபுரமாய்
முப்பந்தல் லாம்பாவில்
மின்சாரம் தருகின்ற காற்றாலை

கடல் கடந்து தொழில் புரிந்து
புகழ் வளர்ந்து நிலை உயர்ந்து
அறிவளந்து செயல்புரியும் தொழிற்சாலை
டி.டி.ஜி தொழிற்சாலை.